11th November 1961]

அவர்களால் உருளைக்கிழங்கு விதைகூட வாங்குவதற்கு இயலாத நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே சர்க்கார் இதைப் பரிசிலனை செய்து, அவர்களுக்கு ஏதாவது பொருளாதார உதவி செய்வார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இங்கே தெரிவிக்கப்பட்ட விவரங்கள்படி இப்போது இதை கவனிக்க ரெவின்யூ போர்டார், மற்றும் பலர் நேரில் சென்று, அவர்களுடன் கலந்து பேசி, சில யோசனைகள் சொன்னார்கள். அவர்கள் என்னென்ன உதவிகள் அளிக்க வேண்டுமென்று சொன்னார்களோ, அவற்றில் என்னென்ன உதவிகள் அளிக்கக்கூடுமோ அந்த உதவிகள் எல்லாம் அளிக்கப்பட்டு வருகிறது. மேலும், கூட்டுறவு சங்கங்கள் மூலம் கடன் வாங்கி இருந்தாலும், அரசாங்கக் கடனில் பாக்கி இருந்தாலும் அவைகளை உடனடியாக வசூலிக்காது நிறுத்திவைக்க வேண்டுமென்று சொன்னார்கள். அதுவும் கவனிக்கப்பட்டு வருகிறது.

*Provident fund schemes (teachers in aided schools)*

* 2013 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any compulsory Provident Fund and Pension Scheme for teachers working in aided schools;

(*b*) whether this scheme has been extended to the aided schools in the Kanyakumari district; and

(*c*) if not, why?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) The Madras Scheme has not been extended to the Kanyakumari district which has a separate scheme called the "Acceded Secondary School Teachers' Provident Fund", which is more advantageous to the teachers than the Madras Provident Fund Scheme.

SRI T. T. DANIEL : In view of the fact that already there is a provision in the existing private secondary school scheme that provident fund scheme should be introduced in all schools, will the Government compel the managements to introduce the provident fund scheme in all the schools there?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have information here to show that any school has not introduced the scheme. If the hon. Member has any information he may write to me about it.

SRI A. NESAMONY : இப்போது உயர்தர பாடசாலைகளிலே பீஸ் இல்லாத காரணத்தாலே, அரசாங்கத்தின் மூலம் மானேஜ்மெண்டுக்கு 20 சதவிகிதம் உதவி கிடைக்கின்ற காரணத்தாலே, மானேஜ்மெண்டுகள் இந்த பிராவிடண்ட் பண்டு ஸ்கீமுக்கு அளிக்கப்பட வேண்டிய தொகையை செலுத்த வகை இல்லாமல் இருக்கிறது என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி எனக்குத் தகவல் இல்லை.